16th August 1960] [Sri V. Ramaiah]

காலாகாலத்தில் செய்து கொடுக்க முன்வருகிறேன். அதனுல் மட்டும் இந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியாது. லைசென்ஸ் தாரர்கள் பகுதிகள் பூராவையும் எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் லைசென்ஸ்தாரர் பகுதிகளில் கணிசமான மின்சார விஸ்தரிப்பு நடக்காமலிருந்தால் அரசாங்கமே விஸ் தரிப்பு செய்ய அதிலுள்ள கஷ்டங்கள் என்ன என்று ஆராய்ந்து பார்த்து எந்த லைசென்ஸ்தாரர் பகுதியில் அதிக துரிதமாக மின்சார விஸ்தரிப்பு நடைபெறுமல் இருந்ததோ, எங்கிருந்து அதிகமாக புகார் வருகிறதோ அங்கு அரசாங்கம் அல்லது மின்சார போர்டே விஸ்தரிப்பு செய்யலாம் என்ற முடிவிற்கு வந்திருக்கிறோம். ஆகவே வருகிற ஆண்டில் இந்தக் கஷ்டம் லைசென்ஸ்தாரர்கள் பகுதிகளிலிருந்து வரக்கூடிய அங்கத்தினர் களுக்கு அதிகமாக இருக்காது. அதைத் துரிதப்படுத்த என் னென்ன முயற்சிகள் எடுக்க வேண்டுமோ அவைகள் எடுத்துக் கொள்ளப்படும் என்று சொல்லிக்கொண்டு பொதுவாக மற்ற கோரிக்கைகளைப் பொறுத்த மட்டில் இங்கு பேசிய அங்கத் தினர்கள் குறைவாக இருந்தாலும் கோரிக்கைகளைப் பொறுத்த வரையில் நூற்றுக்கணக்கான கோரிக்கைகள் வந்திருக்கின்றன. இவைகளையெல்லாம் பரிசீலனை செய்து தீர்த்துக் கொடுக்க எல்லாவித முயற்சிகளையும் மின்சார போர்ட் எடுக்குமென்று சொல்லிக்கொண்டு அங்கத்தினர்கள் அதிக நேரம் எடுக்காத காரணத்தினுல் நானும் அதிக நேரம் எடுத்துக்கொள்ள வேண்டாம், எடுக்கவில்லையென்று என் நிலையைத் தெரிவித்துக் கொண்டு, இந்த ஆண்டும் பொதுவாக மின்சார போர்ட் நல்ல படியாக வேலைகள் கவனித்து செய்து வந்திருக்கிறது என்று சொல்லிக்கொண்டு, அதிலுள்ள சிறு குறைகளை நீக்குவதற்கும், இன்னும் விவசாயிகள், சிறு தொழில் செய்யக்கூடியவர்கள், கிராம வாசிகள் இவர்களுக்கு அதிக நன்மை ஏற்பட, அங்கத்தினர்கள் சொன்ன கருத்துக்களை அரசாங்கம் பரிசீலனை செய்யும் என்று சொல்லிக் கொண்டு என் நன்றியையும் தெரிவித்துக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

## VII.—ANNOUNCEMENT re BUSINESS OF THE HOUSE.

MR. SPEAKER: "பிஸினஸ் அட்வைஸரி கமிட்டி" இன்று காலை 9½ மணிக்குக் கூடி தீர்மாணித்ததைப்பற்றி இப்போது இந்தச் சபைக்கு சொல்ல விரும்புகிறேன்.

சபை ஆகஸ்டு 23-ம் தேதி கலைந்து மீண்டும் செப்டம்பர் மாதம் 5-ம் தேதி கூடி 15-ந் தேதி வரை நீடித்து நடைபெறும்.

செப்டம்பர் 5ந் தேதி 1960.—'' அப்ரோப்பிரியேஷன் பில் 1960 't' லாங்வேஜ் பாலிஸீ ''யைப்பற்றி விவாதம் (ஆகஸ்டு 24, 25-ந்தேதிகளில் எடுத்துக் கொள்வதாக இருந்த அலுவல்) அன்றைய தினம் காலை 9-30 மணி முதல் மத்தியானம் 1-30 மணி வரையிலும், மாலை 3 மணி முதல் 6 மணி வரையி லும், ஆக 8 மணி நேரம் விவாதம் நடைபெறும். அன்றைய தினம்கனம் அமைச்சர் அவர்களுக்கு 1½ மணி நேரம் ஒதுக்கிவைத்து பாக்கி 6½ மணி நேரம் அங்கத்தினர்கள் பேசலாம்.

செப்டம்பர் 6ம் தேதி 1960.
செப்டம்பர் 7ம்தேதி, 1960.
செப்டம்பர் 8ம் தேதி 1960.
} மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட வரைவின் மீது விவாதம்.